Registered No. M. 2330

"SIDDHANTHAM"
Vol. 35—No. 8



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது ஆவணி 1962 ஆகஸ்டு | இதழ் 8

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர்: புலவர் – முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை–4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா

# சமாஜத் தேர்வுகளின் பாடத்திட்டம்

## இளஞ்சைவப்புலவர்

1. இலக்கணம்: நன்னூல் காண்டிகை ஆறுமுக நாவலர், நம்பியகப் பொருள், யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம். 2. இலக்கியம்: திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, நால்வர் நான்மணி மாலை, சோணசைல மாலை, நீதிநெறி விளக்கம், திருக்குறள் அறத்துப்பால் (பரிமேலழகர் உரையுடன்) சுந்தரர் தேவாரம் முழுதும். 3. சாத்திரம்: திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம், திருவருட்பயன், கொடிக்கவி, வினாவெண்பா. 4. உரைநடை: முருகன் அல்லது அழகு (திரு. வி. க.), வாகீசர் அல்லது மெய்யுணர்வு (சிவக்கவிமணி), பட்டினத்தார் வரலாறும் நூல் ஆராய்ச்சியும், தாயுமானவர் வரலாறும் நூல் ஆராய்ச்சியும் (கா. சு. பிள்ளை, M. A., M. L. ) பெரிய புராணவசனம், திருவிளையாடற் புராணவசனம் (ஆறுமுக நாவலர்)

## சைவப்புலவர்

1 இலக்கணம்: தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (நச்சினார்க்கினியர்), சொல்லதிகாரம் (சேனாவரையம்) பொருளதிகாரம் (இளம்பூரணம்), தருக்கசங்கிரகம் (சிவஞான முனிவர்) 2. இலக்கியம்: பெரியபுராணம் (திருஞானசம்பந்தர் புராணம் முழுவதும்), திருவிளையாடற் புராணம் மதுரைக் காண்டம், கந்தபுராணம் தட்சகாண்டம், திருக்குறள் பொருட்பால் (பரிமேலழகர் உரையுடன்), அப்பர் தேவாரம் முழுமையும், திருவாசகம் முழுதும், திருக்கோவையார் 200 பாடல்கள் (பேராசிரியர் உரையுடன்) 3. சாத்திரம்: சிவஞான போதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் சுபக்கம் (சிவஞான முனிவர் உரை) சிவப்பிரகாசம், சங்கற்ப நிராகரணம். 4. உரைநடை: சைவசித்தாந்த ஞானபோதம் (மறைமலை அடிகள்) சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (ந. சிவகுருநாத பிள்ளை) திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே (க. வச்சிரவேலு முதலியார்) சிவஞான முனிவர் உரைநடை நூல்கள், பெரிய புராண சூசனம் (ஆறுமுக நாவலர்) திராவிடப் பிரகாசிகை (சபாபதி நாவலர்)

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

| மலர் 35 | சுபகிருது ஆவணி 1962 ஆகஸ்டு | இதழ் 8 |
| --- | --- | --- |

## ஆறாறு தத்துவங்கள்

(ந. ரா. முருகவேள்)

### முன்னுரை

'உண்மை விளக்கம்' என்னும் தொடரில், 'உண்மை' என்னும் சொல்லானது, பல பொருள்களை உள்ளடக்கி நிற்பதொன்றாகத் திகழ்கின்றது. தத்துவம் என்னும் வடசொல், தமிழில் உண்மை எனப் பொருள்படும். ஆதலின், "பலகலை ஆகமவேதம் யாவையினும் கருத்துப் பதி பசு பாசம் தெரித்தல்" என உமாபதிசிவனார் அருளிச் செய்தபடி, முப்பொருள் இயல்புகளைக் குறித்து விளக்கத் தலைப்படும் இச்சைவ சித்தாந்த நூலில், தத்துவங்கள் முப்பத்தாறு குறித்த செய்திகளும் இயைபுடைமை பெற்றுத் தெளிவுற விளக்கப்படுகின்றன.

> "ஆறாறு தத்துவம் ஏது? ஆணவம் ஏது? அன்றேதான்
> மாறாவினைஏது? மற்றிவற்றின் — வேறாகா
> நான்ஏது? நீஏது? நாதன்நடம், அஞ்செழுத்துத்
> தான்ஏது? தேசிகனே! சாற்று"

---

'சைவ சித்தாந்த சாத்திர வகுப்புக் குழு' வின் சார்பில், மே மாதம் 18—19—20 தேதிகளில் திரு. வி. க. மணி மண்டபத்தில், 'உண்மை விளக்கம்' பற்றி நிகழ்த்திய சொற்பொழிவுகளில், ஒரு பகுதியின் சுருக்கம்,

## தத்துவமும் சாங்கியமும்

காணப்பட்ட உலகத்தைக் கொண்டே, காணப்படாத கடவுளின் உண்மையை உணர்தல் வேண்டும். ஆசிரியர் திருவள்ளுவர், மெய்கண்டார் முதலிய சான்றேர்கள் அனைவரும் இம்முறைமை தழுவியே கடவுளுண்மையினைக் கட்டுரைத் தருளியிருத்தல் காணலாம். மாணிக்கவாசகரும் " ஞாலமே கரியாக நான் உனை நச்சி நச்சிட வந்திடும் காலமே" என அருளிச் செய்தனர். மனிதன் அறிவு வளரப்பெற்றுச் சிந்திக்கத் தொடங்கிய காலம் முதல் இவ்வுலகியற்கையைக் கூர்ந்து நோக்கிப் பலவகைகளில் ஆராய்ந்து பகுத்துணரத் தலைப்படுவானாயினன். அம் முயற்சியில் முதற்கண் தலைப்பட்டு நின்று ஓரளவு வெற்றி கண்டவன் உலகாயதன். அவன் நிலம் நீர் தீ வளி என்னும் நான்கு தத்துவங்கள் வரையில் மட்டுமே ஆராய்ந்து அமைந்தனன். ஆனால் சாங்கியம் என்னும் அறிவு நூற் கொள்கை, இருபத்தைந்து தத்துவங்கள் வரையில் ஆராய்ந்தறிந்த சிறப்பை யுடையது. 'எண்' எனப் பொருள்படும் 'சங்கியை' என்னும் சொல்லினின்று, சாங்கியம் என்னும் சொல் தோன்றியது.

> " சாங்கியம் யோகம் என் றிரண்டு தன்மைய
> விங்கிய பொருள் எலாம் வேறு காண்பன ;
> ஆங்கவை யுணர்ந்தவர்க் கன்றி, அன்னவன்
> ஓங்கிய மேல்நிலை யுணரற் பாலதோ ? "

எனக் கம்பர் சாங்கிய நூற்கொள்கையினைப் புகழ்ந்து போற்றுவர். பரிமேலழகர் " சுவை யொளியூறோசை நாற்றம் என்றைந்தின் வகை தெரிவான் கட்டே யுலகு " என்னும் திருக்குறள் உரையிற் சாங்கியக் கொள்கையினைப் பாங்குற விளக்கியுள்ளார். பரிபாடல் என்னும் சங்க நூலும் இச் சாங்கியக் கொள்கையினை,

> " பாழ்எனக் கால்எனப் பாகுஎன ஒன்றென
> இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
> ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
> நால்வகை யூழி எண் நவிற்றும் சிறப்பினை " (1)

என்னும் வரிகளாற் குறிப்பிட்டிருத்தல் காணலாம். சாங்கிய நூற் கொள்கையின் சிறப்பினையே "ஐயைந்தும் ஆய்வது அறிவு" என்னும் பழம்பாடலும் விதந்து போற்று கின்றது.

இந்தியத் தத்துவக் கொள்கைகள் பலவற்றுள் மிக வும் பழமையும் பெருமையும் வாய்ந்தது சாங்கியம் ஆகும். உலக அமைப்பு வளர்ந்து ஓங்கியுள்ள இயல்பினை நன் கினிது கூர்ந்து ஆராய்ந்து, இருபத்தைந்து தத்துவங்களா கப் பகுத்துணர்த்திய பெருஞ்சிறப்பு சாங்கியத்திற்கே யுரியதாகும். சாங்கிய நூல் உலகமைப்பினை உற்று நோக்கிப் பாகுபாடு செய்து விளக்கியுள்ள திறம், காரண காரிய அடிப்படையில் அறிவு நெறி முறைகளுக் குப் பெரிதும் இயைந்து விளங்குகின்றது. இவ்வாற்றாற் சாங்கியக் கொள்கையானது, மெய்ப் பொருளறிவுத் துறையில் குறிப்பிடத் தக்கதொரு சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது எனலாம். (2)

---

(1) பாழ் — புருடன். கால்—ஆகாயம் முதலிய பூதங்கள் ஐந்து. பாகு–பகுக்கப் பெற்ற கன்மேந்திரியங்கள் ஐந்து. ஒன்றிரண்டு மூன்று நான்கைந்து – ஐம்பூதங்களின் சிறப் புப் பண்புகள் ஆகிய ஓசை ஊறு உருவம் சுவை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்து. ஆறு–ஞானேந்திரியங் கள் ஐந்தும் மனமும். ஏழு–அகங்காரம். எட்டு–மான், புத்திதத்துவம். தொண்டு – மூலப் பகுதி. 'எண்' என்றது ஈண்டுச் சாங்கிய நூலையே குறிக்கும் எனவும் கொள்ளுதல் பொருந்தும்.

(2) "The Samkhya is the oldest school of Hindu Philosophy. The unique position of the Samkhya in the history of thought is the fact that it expounds by careful reflection the first systematic account of the process of cosmic evolution which attempts to comprehend the universe as a sum total of twenty-five categories. This exposition is no mere metaphysical speculation, but is a purely logical account based on the scientific principles... The Samkhya is held to be the most notable attempt in the realm of pure philosophy" —THEOS BERNARD.

## சைவ சித்தாந்தத்தின் சால்பு

இத்தகைய சிறந்த சாங்கியக் கொள்கையினும் மிக ஆழ்ந்து நுணுகிச் சென்று, உலகமைப்பின் பொருட் கூறுகளையும், தோற்ற ஒடுக்க முறைகளையும் குறித்து ஆராய்ந்து, சைவசித்தாந்தம் திறம்பட விளக்குகின்றது. இவ்விளக்கத்தின் விளைவே ஆருறு தத்துவங்களைப்பற்றிய செய்திகள் ஆகும். உலோகாயதம் மாத்தியமிகம் யோகாசாரம் சௌத்திராந்திகம் வைபாடிகம் ஆருகதம் தருக்கம் மீமாஞ்சை ஏகான்மவாதம் முதலிய சமயங்கள் பலவும், தத்துவங்களை ஆராயும் நெறியில் முறையே ஒன்றின்னொன்று குறைந்து நிற்பனவாய், மூலப்பகுதிக்கு மேற்பட்ட பொருளுண்மையினைக் கண்டறிந்தன அல்ல. இச்சமயங்கள் கூறும் தத்துவப் பாகுபாடுகள் அனைத்தும், சாங்கியக் கொள்கை விளக்கும் இருபத்தைந்து தத்துவங்களுள் அடங்குவனவேயாம். மூலப்பகுதிக்கு மேற்பட்ட பன்னிரண்டு சூக்கும தத்துவங்களை யெல்லாம் ஆராய்ந்துணர்ந்த சிறப்பு, அகப்புறம் அகம் என்னும் பாகுபாட்டைச் சேர்ந்த சமயங்களுக்கும், இவைகளெல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டிலங்கும் சைவ சித்தாந்தத்திற்குமே யுரியதாகும்.

> "ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுஎன்பர்
> ஆகின்ற ஆருறு அருஞ்சைவர் தத்துவம்
> ஆகின்ற நாலேழ் வேதாந்தி, வயிணவர்க்கு
> ஆகின்ற நாலாறு, ஐயைந்து மாயா வாதிக்கே"

எனவரும் திருமந்திரப் பாடல், ஆருறு தத்துவங்கள் அருஞ்சைவர்க்கே யுரியன என்று கூறியிருத்தல் அறிந்தின்புறத் தக்கது. இம் முப்பத்தாறு தத்துவங்களும் முறையே ஆன்மதத்துவம் (24) வித்தியாதத்துவம்(7) சிவதத்துவம்(5) என மூன்று வகைப்படும். அவற்றுள் ஆன்மதத்துவம் இருபத்து நான்கும் முறையே வருமாறு :

## ஆன்ம தத்துவங்கள்

பூதங்கள் ஐந்து : பிருதிவி அப்பு தேயுவாயு ஆகாசம். இவற்றை நிலம் நீர் தீ வளி விசும்பு எனவும், மண் புனல் அனல் கால் வான் எனவும் கூறுவர். அண்டம் (Macroco

sm) பிண்டம் (Microcosm) என்னும் இரண்டும் இவ்வைம் பெரும் பூதங்களின் கலப்பினுல் ஆகிய காரியமேயாகும். பூதங்கள் ஐந்திற்கும் தனித்தனியே வடிவு நிறம் எழுத்து குணம் குறி தொழில் தெய்வம் என்பன உண்டு. (ஒப்பு நோக்குக; சித்தியார் சுபக்கம், 155—158) இப்பூதங்கள் ஐந்தும் அகப்பூதம் அகப்புறப்பூதம் புறப்பூதம் என மூன்று வகைப்படும். இந்திரியங்களுக்குப் பற்றுக்கோடு ஆவன பூதங்கள். நம்மனோர் உடலாக அமைவன அகப் புறப் பூதங்கள், உயிருக்கு நுகர் பொருளாகிய விடய மாக இருப்பன புறப்பூதங்கள்.

தன்மாத்திரைகள் ஐந்து: சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்பன. இவைமுறையே ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என வழங்கப்படும். 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றைந்தின் வகை தெரிவான் கட்டே யுலகு' என்பது திருக்குறள். பூதங்கள் ஐந்தின் சூக்கும நிலையே தன் மாத்திரைகள் ஆகும். தன்மாத்திரைகளில் இருந்தே பூதங்கள் ஐந்தும் முறையே தோன்றுகின்றன. தன்மாத் திரைகள் பூதாதி யாங்காரத்தில் இருந்து பிறக்கின்றன. தன்மாத்திரையும் ஐம் பெரும் பூதமும், தேர் ஊர்வானுக் குத் தேர்போல இந்திரியங்கட்கு ஆற்றல் விளைவித்து நிற் கும். பெரும்பூதமும் தன் மாத்திரையும் குடமும் குடமேற் பூச்சும் போலும்.

ஞானேந்திரியங்கள் ஐந்து: சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராணம் என்பன. இவற்றை முறையே செவி தோல் கண் நாக்கு மூக்கு என்பர். இவை ஐந்தும் முறையே ஐம்பூதங்களைப் பற்றுக் கோடாகக் கொண்டு, சுவை யொளி யூறோசை நாற்றங்களை அறியும். அறிகருவி கள் ஆகிய ஞானேந்திரியங்கள் தைசத ஆங்காரத்தில் இருந்து தோன்றும்.

கன்மேந்திரியங்கள் ஐந்து; வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்பன. இவை முறையே வாய் கால் கை எரு வாய் கருவாய் எனவும் படும். ஐம்பூதங்களைப் பற்றுக்கோ டாகக் கொண்டு, இவைகள் பேசல் நடத்தல் கொடுத்தல் விடுத்தல் இன்புறல் (வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம்) என்னும் தொழில்களைச் செய்யும். தொழிற்

கருவிகள் ஆகிய கன்மேந்திரியங்கள் வைகாரியாங்காரத்தினின்று பிறக்கும்.

அந்தக் கரணங்கள் நான்கு; மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பன. ஒரு விடயத்தைப் புறவிந்திரியம் பொதுவகையான் முன்னுணர, அதன்பின் அவ்விடயத்தை அகவிந்திரியமாகிய மனம் பற்ற, அதன் பின் ஆங்காரம் ஒருப்பட்டெழ, அதன் பின்னர்ப் புத்தி நிச்சயிக்கும். சித்தம் இஃது யாதாகற்பாற்று என ஒரு பொருளைச் சிந்திக்கும். மனம் இது குற்றியாகற்பாற்று மகனாகற்பாற்று என ஒன்றைச் சங்கற்பித்தும், அஃதாமோ அன்றோ என ஐயுற்றும் பற்றி நிற்கும். ஆங்காரமானது குற்றியென்றுதல் மகனென்றுதல் ஒன்றை நிச்சயிப்பேன் யான் என்று எழுச்சி கொள்ளும். புத்தியானது இவன் மகன் இது குற்றி இஃதாடை என அவ்வப் பொருள்களைப் பெயர் சாதி கன்மம் குணம் என்பன பற்றிச் சிறப்புவகையால் துணியும். கண்ணுக்குக் காட்டாகிய விளக்குப் போல, ஆன்மாவுக்குக் காட்டாக நிற்பது அந்தக்கரணம். சிந்தித்தல் ஆகிய மனத்தின் செய்கையே சித்தம் என்று கூறப்படுவதல்லது, சித்தம் என்பது ஒரு தனித் தத்துவமன்று. "சிந்தை நினைவு ஐயம் வந்து தரும் மனம் ஒழிய வகுப்பொணாதே" எனச் சிவப்பிரகாசமும், "மனமது சைசதத்தின் வந்து ஒரு பொருளை முந்தி நினைவதும் செய்து, அங்கு ஐய நிலைமையில் நிற்கும்" எனச் சிவஞான சித்தியாரும் கூறுதல் காணலாம்.

உண்மை விளக்கத்தில், மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் முறையில் வைத்து அந்தக்கரணங்களின் பெயர் கூறப்பட்டுள்ளது. அமைச்சு நாடு அரண் பொருள் படை நட்பு என்பதே முறையாயினும், ஆசிரியர் திருவள்ளுவர்

> "படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு"

எனச் "செய்யுளாகலின் முறை பிறழக் கூறினர்" எனப் பரிமேலழகர் கொள்ளுமாறு போல, ஈண்டு நாமும் சித்தம் மனம் அகங்காரம் புத்தி எனற்பாலனவற்றையே, திருவதிகை மனவாசகங்கடந்தார் செய்யுள் அமைப்பு நோக்கி முறைபிறழ வைத்தார் என உணர்ந்து கொள்ளுதல்

வேண்டும். இங்ஙனம் சிவஞான போதப் பேருரையிற் சிவ ஞான சுவாமிகள் விளக்கியருளினர்.

இது காறும் கூறிவந்த தத்துவங்கள் இருபத்துநான் கும், ஆன்மாவுக்குத் தூலவடிவில் நேரே தொடர் புற்றுப் பயன்படுவன வாதலின், ஆன்மதத்துவங்கள் எனப் பெயர் பெறும். இதனைச் சிகண்டருத்திரர் அதிட்டித்து நிற்பர்.

## வித்தியா தத்துவங்கள்

கால தத்துவம்: புத்தர் முதலினோர் காலம் என் றொரு பொருள் இல்லை என்பர். மாந்தளிர் முதலியன இள வேனிற் காலம் முதலிய வற்றினன்றித் தோன்றாமையும், முல்லைப்பூ முதலியன கார்காலம் முதலியவற்றினன்றி மல ராமையும் காண்கின்றோம். இங்ஙனமே உலகத்துப் பொருள்களெல்லாம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன் றிப் பிறிதொரு காலத்தில் அழிந்து படுதல் யாவரும் அறிந்ததொன்று. ஏனைக் காரணங்களெல்லாம் தொக்க வழியும் இதற்கு முன்னர்த் தோன்றாத ஒரு பொருள் இப் பொழுது தோன்றுதற்கு அமைந்த காரணம் யாது, அது காலம் எனத் துணியப்படும்.

அசுத்தமாயையினின்று அநந்த தேவரால் முறையே காலமும் நியதியும் கலையும் தோன்றும். கலையினின்று வித்தையும், வித்தையினின்று அராகமும் பின்னர்த் தோன்றும். "மாயையிற் காலமோடு நியதிபின் கலாதி தோன் றும்" என்பது சிவஞான சித்தியார். சிவப்பிரகாசத்தில் உமாபதி சிவம் கலையின்பின் காலத்தை வைத்து, "அருத்தி மிகும் கலை காலம் நியதியுடன் வித்தை அராகம் இவை அநந்தரால் மாயைதனில் ஆகும்" என அருளிச் செய்தனர். தோற்றம் பற்றிய முறைமை கருதின் காலம் முன்னாகவும், தொழிற்பாட்டு முறைமை பற்றிக் கருதின் கலை முன்னாக வும் கொள்ளப்படும். இவ்விருவகையினையும் இவ்விரு நூல் களும் உணர்த்தின.

காலம் என்னும் தத்துவமானது செல்காலமான எல்லையும், நிகழ்காலமான பலனும், எதிர்காலமான புது மையும் ஆக மூன்று வகைப் பட்டிருக்கும்.

" நிகழ்காலம் கழிகாலம் எதிர்காலம் என்றே
ஓசைதர வருங்காலம் எல்லை பலம் புதுமை
உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே"
—சிவப்பிரகாசம், 40.

நியதி தத்துவம்: பால் ஊழ் தெய்வம் விதி நியதி என்பன ஒருபொருட் கிளவிகள். அவரவரால் ஈட்டப்படும் வினையின் பயனை அவரவரே நுகருமாறு, அரசர் ஆணை போல நியமித்து நிறுத்துவது நியதி தத்துவம். ஒருபாற் கோடாது நடுநின்று செங்கோல் செலுத்தும் அரசனின் ஆணையில்லாதவழி எளியோர் பொருளை வலியோர் கவர்ந்து கொள்ளுவது போல, நியதி தத்துவம் இல்லாத வழி ஒருவர் செய்த வினைப்பயன் மற்றொருவர் கவர்வதாய் முடியும். தொல்காப்பியர் திருவள்ளுவர் இளங்கோவடிகள் முதலிய சான்றோர்கள் எல்லாரும் ஊழினைத் தத்தம் நூல்களிற் குறிப்பிட்டு வலியுறுத்தியுள்ளமை காணலாம்.

" பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே, தற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு"

என நாலடியார் கூறுவது போல, ஒருசிலர் அவரவர் வினைப்பயனை நியமித்தற்கு இருவினையே அமையும், நியதி தத்துவம் வேண்டா என்பர். இருவினையானது நுகர்ச்சியைப் பயத்தல் மாத்திரையே யன்றி, அந்நுகர்ச்சி வினை செய்தவனைச் சென்று அடையுமாறு செய்விக்க மாட்டாது. ஆதலின் முதல்வனது ஆணையாகிய சத்தியை முன்னிட்டு நுகர்ச்சியினை நியமித்து நிறுத்துதற்குக் கருவி நியதி தத்துவமேயாகும். "செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும் மெய்வகையால் நானகாகும் விதித்த பொருள். இவ்வியல்பு சைவ நெறி அல்லவற்றுக்கு இல்லை" எனப் பெரிய புராணமும் திருவருட்பயனும் கூறுதல் காணலாம். " நியதி தேசமிகும் அரசர்தரும் ஆணை, செய்தி செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல, நேசமுறும் தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்" (40) என்பது சிவப்பிரகாசம்.

கலைத் தத்துவம்: கலை என்னும் தத்துவமானது மூல மலத்தின் மறைப்புண்டு சூனியம் போல நின்ற ஆன்மாக் களுக்குப் போக நுகர்ச்சியின் பொருட்டு, மலசத்தியிற் சிறிதே நீக்கி ஆன்மாக்களுக்குக் கிரியாசத்தியை விளக்கு வது. 'கலித்தல்' நீக்குதல், செலுத்துதல் எனப் பொருள் படும். ஆதலின் மலத்தை நீக்குதலாற் கலை எனப் பெயரா யிற்று. ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கிப் புத்திதத் துவத்திற் செலுத்துவது கலை. "அயர்விலாக் கலை பின் தோன்றி ஆணவம் ஒதுக்கிச் சித்தின் செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்கும் சிறிதே" (சித்தியார் சுபக் 145). "வைத்த கலை தான் மூலமலம் சிறிதே நீக்கி மருவும் வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனை" (சிவப்பிரகாசம், 39).

வித்தியா தத்துவம்: கலையினின்றும் தோன்றி ஆன் மாக்களுக்கு ஞானசத்தியை விளக்கி, எவ்வகைப்பட்ட உணர்வும் ஆன்மாவிற் சென்று விடயமாதற்குக் கருவி யாய் நிற்பது வித்தியா தத்துவம். புத்தி தத்துவ இயக்கத் தாற் பரந்து நிகழும் உயிரின் ஆராய்ச்சியுணர்வுக்கு அடிப் படைக் காரணமாய், உயிரின்கண் அறிவினை முதன் முதல் எழுப்புதல் இவ்வித்தியா தத்துவத்திற்கே யுரிய சிறப்பி யல் பாகும். வித்தை என்பது, அறி-அறிவி எனப் பொருள் படும் வித் என்னும் தாதுவிற் பிறந்த 'வித்யா' என்னும் என்னும் வடசொல்லின் திரிபாகும். "வித்தை உயர் கலை அதனில் தோன்றி அறிவினை யுதிக்கப் பண்ணும்" (சித்தி யார், 145) "வாயில்களின் பயனைப் புத்திதர வித்தை இடைநின்று அறிவை உயிர்க்குப் பொருந்தியிடும் வகை புணர்க்கும் புனிதசத்தி புணர்ந்தே" (சிவப்பிரகாசம், 39).

அராக தத்துவம்: இச்சை நிகழ்ந்தன்றிப் போக நுகர்ச்சி செல்லாமையானும், இச்சையாவது ஞானவிசே டமே யாகலானும், வித்தியா தத்துவத்தினின்றும் அராக தத்துவம் தோன்றி, ஆன்மாவுக்குப் பொருள்களில் விருப் பத்தை யுண்டாக்கும். அராகம் என்னும் சொல் இச்சை, விருப்பம் எனப் பொருள்படும். "விசசையின் அராகம் தோன்றி வினைவழி போகத்தின்கண் இச்சையைப் பண்ணி நிற்கும்" என்பது சித்தியார்.

இவ்வாறு காலம் நியதி கலை வித்தை அராகம் என்னும் தத்துவங்கள் ஐந்தும், ஆன்மாவினுடனாய்க் கஞ்சுகம்

(சட்டை, போர்வை) போலப் பந்தித்து நிற்றலின், இவை பஞ்ச கஞ்சுகம் என வழங்கப்படும்.

புருட தத்துவம்: மேற்கூறிய பஞ்சகஞ்சுகங் களுடன் அவிச்சை அகங்காரம் அவா ஆசை வெகுளியாகிய பஞ் சக் கிலேசம் என்னும் பும்ஸ்துவ (போக நுகர்ச்சிக்குரிய) மலத்தோடு இயைந்து நின்று, ஆன்மாவானது போகம் நுகர முற்படும் நிலையே புருட தத்துவம் எனப்படும். "ஐவகையால் உறுபயன்கள் நுகரவரும் காலம் அது புருட தத்துவம் என்ற றைந்திடுவர் அறிந்தோர்" என்பது சிவப்பிரகாசம். புருடதத்துவம் உண்மையாற் சித்தும், உபசாரத்தாற் சடமுமாம் என்பது உணர்தற்குரியது.

மாயைத் தத்துவம்: ஈண்டு மாயை எனப்படுவது மும்மலங்களுள் ஒன்றாகிய மாயையன்று. இது வித்தியா தத்துவங்களுள் ஏழாவதாக நிற்பது. ஆன்மாக்களைப் போகநுகர்ச்சியிற் செலுத்தியும், அவற்றிற்குப் போக்கி யப் பொருள்களாக அமைந்தும் மயக்கி நிற்றலின் 'மயக் குவது' என்னும் பொருளில் மூலப்பிரகிருதி ஈண்டு மாயை எனப்பட்டது.

மேற்கூறிய காலம் நியதி முதலிய தத்துவங்கள் ஏழும் ஆன்மாக்களுக்கு வித்தையை (அறிவை) எழுப்பும் தத்துவங்களாதலின், வித்தியா தத்துவங்கள் எனப் பெயர் பெற்றன.

## சிவ தத்துவங்கள்

மாயை என்பதொன்றே, தூலம் சூக்குமம் பரம் என மூவகைப்பட்டுத் தூலமாய் நின்ற அவத்தையிற் பிரகிரு திமாயை என்றும், சூக்குமமாய் நின்ற அவத்தையில் அசுத் தமாயை என்றும், பரமாய் (அதிசூக்குமமாய்) நின்ற அவத்தையிற் சுத்தமாயை என்றும் வழங்கப்படும். சுத்த மாயையினின்றே சுத்த தத்துவங்கள் ஆகிய சிவதத்துவங் கள் ஐந்தும் தோன்றுகின்றன.

சுத்தவித்தை: சுத்தமாயையில் தூலகாரியம் தோன்று தற்கு ஏதுவாக முதல்வனின் ஞானசத்தி மிகுந்தும், கிரியா சத்தி குறைந்தும் நிகழ்வது. உருத்திரன் மால் அயன் இந்தி ரன் முதலியோர்க்கும் அவர்களின் தனுகரணாதிகளுக்கும் இஃது இடமாகும்.

ஈசுரம் : சுத்தமாயையிற் சூக்குமமாய்க் காரியம் தோன்றுதற்குக் கிரியை மிகுந்து, ஞானம் குறைந்து நிகழ்வது. அநந்ததேவர் முதலிய வித்தியேசுரர் எண்மருக்கும் பிறருக்கும் இஃது இடமாகும்.

சாதாக்கியம் : சுத்த மாயையைக் காரியப் படுத்துதற் பொருட்டு முதல்வனின் ஞானசத்தியும் கிரியா சத்தியும் தம்முள் ஒத்து நிகழ்வது. பிரணவர் அனுசதாசிவர் முதலியோர்க்கும் அவர்தம் தனுகரணாதிகட்கும் இஃது இடமாக அமையும்.

சத்தி தத்துவம் : சுத்தமாயை காரியப்படுமாறு முதல்வனது கிரியா சத்தி வெளிப்பட்டு நிற்பது. முதல்வனின் கிரியா சத்திக்கும், நிவிர்த்தி முதலிய பஞ்சகலை கட்கும், மலபந்தம் நீங்கித் தூலலய வாசனை மாத்திரம் உடைய முத்தர்களுக்கும், அவர்களுக்குரிய புவன போகங்களுக்கும் இத்தத்துவம் இடமாக நிற்கும்.

சிவதத்துவம்: சுத்தமாயை காரியப் படுதற்கு ஏதுவாகும் வண்ணம் இறைவன் தனது ஞானசத்தி மாத்திரையால் நோக்கி நிற்கப் பெறுவது. சூக்கும லய வாசனை மட்டும் உடைய முத்தான் மாக்களுக்கும், அவர்களுக்குரிய புவன போகங்களுக்கும், முதல்வனின் ஞானசத்திக்கும் இஃது இடமாக விளங்கும்.

ஆன்மதத்துவம்(24)வித்தியாதத்துவம் (7) சிவதத்துவம் (5) என்னும் இம் மூன்றும் முறையே போக்கிய காண்டம், போசயித்ரு காண்டம், பிரேரக காண்டம் எனக் குறிக்கப் படும். இவற்றுள் சிவதத்துவங்கள் சுத்தமும், வித்தியா தத்துவங்கள் சுத்தாசுத்தமும், ஆன்மதத்துவங்கள் அசுத்தமும் ஆகும்.

> " இந்நிலையில் ஐந்துசுத்தம் ; ஏழ்சுத்தா சுத்தம் ;
> எண்மூன்றும் அசுத்தம் ; எனும்இவைமுப்பத் தாறும் "
> — சிவப்பிரகாசம், 46.

> " தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும்,
> மூல உடம்பாம் முதல்நான்கும், — மேலைச்
> சிவமாம் பரிசினையும் தேர்ந்துணர்ந்தார், சேர்ந்த
> பவமாம் பரிசறுப்பர் பார்"
> —திருக்களிற்றுப் படியார்.

# தேனூறும் வாசகங்கள்

(வித்துவான் திரு. கு. நடேச கவுண்டர்,
முதல்வர், சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரி, பேரூர்,

தேனூறும் வாசகங்கள் அறுநூறுந் திருக்கோவை
நானூறு மமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறுங் கங்கைநிகர் மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை யிருபோது மிறைஞ்சிடுவேன்.

(எல்லப்ப நாவலர்)

திருவார் பெருந்துறையில் செழுமலர்க் குருந்த நீழலில், சிவபெருமான் குருவாகி எழுந்து அருளி இருந்து திருந்திய வேதசிரப் பொருண் முழுதும் உரைத்தருளக் கொள்ளை கொண்டு, "காயத்துள் அமுது ஊற ஊற நீ கண்டு கொள் என்று காட்டிய சேய மாமலர்ச் சேவடியைச் சென்னி"யிலும் சிந்தையிலும் மலர வைத்து, மாறி நின்று மயக்கிடும் வஞ்சப் புலன் ஐந்தின் வழியடைத்து அமுதே ஊறி நின்று உள்ளே எழும் பேரின்ப வெள்ளத்துள் திளைத்துப், பிச்சேற்றி வாராவழி அருளிவந்து தம் உள்ளம் புகுந்த போதை வாரியன் பாற் பொங்கி எழும் பேரன் பாலே கரைந்து கரைந்து இருகண் நீர் மழைவாரச் சிவானந் தம் தேக்கெறிந்து மாணிக்கவாசகர் வாய் மலர்ந்த திருவாசகங்களே தேனூறும் வாசகங்களாகும்.

இயல்பாகவே மதுரநிறைந்த முந்திரிக்கனி தேனிலும் ஊறிச் சுவை கனிமிக்கு விளங்குதல் போலத் தண்ணிய மெல்லிய தேனின் சுவையும் கலந்து திருவாசகப் பாடல்களாய் வாதவூர் அடிகளது மணி நாவில்தோன்றின. ஆதலால்'மதுர வாசகம்' எனப் பெயர் பெற்றன. பாதகண்டத்தில் தமிழகத்தில் சைவசமயத்தில் பிறந்து வளர்ந்த தமிழ்ப் பெருமக்களுக்கு மட்டும் அல்லாமல் வேறு கண்டத்தில் பிறமொழி பேசும் நாட்டினராய்ப் பிறசமயத்தில் பிறந்து வளர்ந்த நடுநிலை நெஞ்சத்து நல்லறிவாளர்க்கும், தன்னை யோதுங்கால் தன்னை மறந்து அன்பில் திளைக்கும் அநுபவம் தரும்ஆற்றல்

உள்ளது திருவாசகம் இதற்கு G. U. போப் பாதிரியாரே சான்றுவர்.

எனக்கு அறிமுகமான ஒருவர் — நாத்திகம் பேசுவது பகுத்தறிவுடைமைக்குப் பின்னமாகும் என்பதை உணராது, சின்னமாகும் எனக்கொண்டு பேசுவார். 'திரு வாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்' என்கின்றூர்களே! யான் படித்துப் படித்துப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் உருக்கம் வரவில்லையே என்று இகழ்ச்சிக் குறிப்பொடு வின வினர். அவருக்கு என்ன விடை கூறுவது? "திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்......அன்பராகுநர் அன்றி மன்பதை உலகில் மற்றையர் இலர்," என்றுதான் அறிஞர்கள் கூறு கின்றனர்," என்ற அளவில்தான் விடைகூறினேன். நீலம்உண் டதுவெள்ளை நிறமாமே? என்று ஞானசம்பந்தப் பெருமான் அருளியது போல, அகத்தும் புறத்தும் கறுப்பை ஏற்றிஅறி வின் செம்மையை வெள்ளையாக்கிக் கொண்டார் சிலருடைய உள்ளத்தைத் திருவாசகமும் உருக்காது என்றால், அவர்களு டைய வினையின் வலிமை வியக்கற் பாலதே. விழியுள்ள வர்க்கே விளக்கு; மொழியுள்ளோர்க்கே முதுநூல்; அன்புள் ளவர்க்கே அருள் நூல்; என்று அமைதி யுறுவதே யாம் செயற் பாலது.

## திருவாசகப் பாக்களில் தேன் ஊறுவது ஏன் ?

பாக்களின் இனிய ஓசையும் சொற்களின் செம்மையும், கருத்தின் ஆழமும் பொதுவாகவும், சிவம் என்னும் நாமம் தனக்கே உடைய செம்பொருளின் அருமையும், பெருமை யும், பரங்கருணைத் திறமும் தேனில் இனிமை போலக் கலந் துள்ள பக்திச்சுவையும் ஆகிய பொருட் சிறப்புச் சிறப்பாக- வும் திருவாசகப் பாக்களில் செறிந்து நிற்பதால் அவை ஓது வார் உள்ளத்தில் தேனூறச் செய்கின்றன. ஒரு சில எடுத் துக் காட்டுக்கள் காண்போம்.

திருவாசக நூல், "நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க," எனத் தொடங்கி, "அம்மை எனக் கருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே" என முடிபு பெறுகின்றது,

அங்ஙனம் தொடங்கும் அகவலுக்குச் சிவபுராணம் என்பதும்,முடியும்பதிகத்துக்கு அச்சோப்பதிகம் என்பதும்பெயர் ஆம். அந்த அகவலின் சிறப்பு, "ஈசர் தமக்கு இயல்பான திருநாமம் முதல் எவையும் மாசறவே வாழ்க வென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்," எனவும், அச்சோப் பதிகத்தின் சிறப்பு, "ஈசர் போக சுகம் தமக்கு அளித்தது ஆரே பெறுவார் எனும் அருமைபுகல் அச்சோவே" எனவும் பழைய திருப் பெருந்துறைப் புராணம் கூறுகின்றது. எனவே சிவபெருமானுடைய திருநாமமாகிய திருவைந் தெழுத்தைத் துணைக்கொண்டு அவன் திருத்தாளை வாழ்த்தி அவன் திருவருள் பெற்றுச் சிவபோக சுகம் பெற்று, "அம்மை எனக்கருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே," எனச் செம்மாந்து வாழ்வதே திருவாசகத்தின் குறிக்கோள் என்பது போதரும். சிவபுராணத் திருவகவலில் வரும் விளிகள் அவனுடைய இலக்கணங்களையும், பரங்கருணையையும் புலப் படுத்துவனவாக உள்ளன.

"ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க," என்பது சிவன் தன்மைக் கண் தானே ஆகியும், கலப்பால் எல்லாப் பொருளும் ஆகியும் நிறைந்து விஸ்வரூபன், விஸ்வாந்தர் யாமி, விஸ்வநாதன், விஸ்வாதீதன் என்ற பெயர்களுக்குப் பொருத்தமானவன் என்று உணர்த்துகின்றது.

ஏகன் என்ற பெயரின் விளக்கமாக.

" ஸர்வாந் லோகாந் உத்க் ருஹ்ணுத்யஸ்ரம்
ஸ்ருஜதி விஸ்ருஜதி வாஸயதி தஸ்மா துச்யத ஏக: "

என அதர்வ சிரோப நிடதம் கூறுகின்றது.

அதன் பொருள் :— எல்லா உலகங்களையும் தன்கண் ஒடுக்கிக் கொள்கின்றான்; படைக்கின்றான்; துடைக்கின்றான்; காக்கின்றான். ஆகலான் ஏகன்எனப்படுகின்றான் என்பது. "காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதும் கண்ணார் விசும் பின் விண்ணோர்க் கெல்லாம் மூப்பாய் மூவா முதலாய் நின்ற முதல்வா" எனத் திருவாசகமும் கூறிற்று. இறைவன் ஏகனாகவும் அநேகனாகவும் இருப்பதைப் பற்றிக் கூறும், "சகலத்

னும் ஒற்றைப் பட்டயல் பட்டு நிற்கு நிற்பதைக் கூறும் சரணப்ரசித்தி சற்றுவனாரோ" என்ற அருணகிரி நாதர் திருவாக்கும் ஈண்டு உன்னற் பாலது.

"சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினைமுழு து மோய உரைப்பனியான்"
[மோய=கெட. 'ஓய' எனப் பிரிப்பது பிழை]

என்பதுள் முதலிரண்டு வரிகள் அடிக்கடி அன்பர்களால் எடுத்தாளப் படுவன. அவற்றின் கருத்து "சிவபக்தியோ அவ்விறைவனது பிரசாதத்தினாலேயே உண்டாகத் தக்கது" என்று சிவ மஹா புராணத்திலும் காணப் படுகின்றது. பின்னிரண்டு வரிகளால் சிவனுடைய கீர்த்திகளை உரைப்பதனால் "வெய்ய வினை இரண்டும் வெந்தகலும்" என்பது அறிகின்றோம். "இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன்,— பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்று பொதுமறையும் புகலும்.

சிவபெருமான் எங்கும் நீக்கமற நிறைந்தவன் என்பதை
"விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்விளங்கொளி
[யாய்
எண்ணிறந் தெல்லையிலாதானே," என்பதாலும்
'வேதங்கள்—ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற
நுண்ணியனே", என்பதாலும்
"நள்ளும் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே,"

என்பதாலும், பிறவற்றாலும் திருவாசகம் கூறுகின்றது. இக்கருத்து "ஊர்த்வ பூர்ணம் அத: பூரணம் மத்ய பூரணம் சிவாத்மகம்" என்று முத்தி கோபநிஷதம் கூறிற்று. இனி, பிறப்பினால் தாம் உற்ற இளைப்பினைப் பற்றிக் குறிப்பிட்டு,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்று வாதவூரடிகள் மொழிந்துள்ளார். கல்லாகவும் பிறப் பதுண்டோ? கல்லிலும் உயிர் உண்டோ எனின் உண்டுஎன் பதாக, "ஸர் ஜான் வுட்ரோப்" என்ற ஓர் ஆங்கிலேயர் [கல் கத்தா ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவர். தேவி பக்தர்களில் சிறந்தவர். ஆரியத்தினின்றும் சக்தி சம்பந்தமான பல நூல் களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். சொந்தமாகவும் பல நூல்கள் எழுதியவர்] கூறுகின்றதைக் கேண்மின் :

"மலைகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் அங்குலம் அங்குலமாக மேலே கிளம்பிப் பின் அங்ஙனமே நிலத்தின் வயிற்றுள் இறங்கி மறைகின்றன. மலைக்கும் பிறப்பும் இறப் பும் உண்டு. செத்த மரத்தில் வலிமை இல்லை. செத்தமலையின் கற்கள், பனி முதலியவற்றால் வலிமை இழந்து பசையற்றுப் போகின்றன. செத்த மரத்தின் கட்டையைப் போலவே. மெல்லப் புடைத்தாலே அக் கற்கள் பொடிந்து போகின் றன. கல்வாணிகர் இதனைத் தடையேது மின்றி ஒத்துக் கொள்கின்றனர். அவர்கள் உயிரோடு இருக்கும் மலைக்கு வேறுபாடு காட்டவும் வல்லுநராயுளர். (Principles of Tantra Sastra—Page no. 98-99) நமக்குத் தெரியாத செய்திகள் உலகத்தில் எத்தனையுளவோ! "கற்றது கை மண்ணளவு கல்லாதது உலகளவு"!

முந்திய பிறவிகளில் புண்ணியம் செய்துள்ளோர்க்கே பிறவித துன்பம் புலனும். அதுபுலனாகியவர்க்கே இனிப் பிற வாமே காக்கும் தெய்வத்தின் பாற் சிந்தை செல்லும். மானி டப் பிறவியிலேதான் தெய்வத்தைத் தேடி உய்யும் அறிவு உண்டாகும். இன்னோரன்ன செய்திகள் பலவும் போற்றித் திருவகவலில் சாற்றப் படுகின்றன,

"யானை முதலா எறும்பு ஈருய ஊனமில்யோனி—
யின் உள்வினை பிழைத்தும்" என்பதனுல்

மனிதப் பிறவி வாய்த்தலின் அருமை அறிவுறுத்தப்பட்டது.

"மானுடப் பிறப்பினுள் மாதவுதரத்து ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்," என்பது தொடங்கி, "தக்கதச மதி தாயோடு தான் படுந்துக்க சாகரத்துயரிடைப் பிழைத்தும்," என்பது ஈருகக் கருப்பையிற் படுந்துன்பமும், அதினின்று வெளிப் படுங்கால் விளையும் துன்பமும் விளம்பப் பட்டன.

"காலை மலமொடு" என்பது தொடங்கிப் "புல்வரம்பாய பல துறைபிழைத்தும்" என்பதிருக மனித வாழ்க்கையிற் படுந் துன்பங்கள் வருணித்துக் கூறப்பட்டன.

"தெய்வ மென்ப தோர் சித்தமுண்டாகி" என்பதுமுதல் 'அதிற் பெருமாயை எனைப் பல சூழவும்' என்பது வரை நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைந்து அலையும் அல் லல்கள் கூறப்பட்டன.

இங்ஙனம் சொல்ல மாளாத் துன்பத்திற்சுழலும் ஒரு வனை அறைகூவி ஈர்த்து ஆட்கொண்டு, கொள்ள மாளா இன்ப வெள்ளத் தழுத்தி வினை கடிவிக்கின்ருன் எல்லையில் கருணை இறைவன் என்பது, தேனூறும் வாசங்கள் பலவற்றி லும் கூறப் படுகிறது. அதிசயப்பத்து, அற்புதப்பத்து ஐதி யின் புறற் பாலன.

திருச்சதகத்தில் சுட்டறுத்தல் என்னும் பகுதியில் அடி கள் தம் சிறுமையையும் இறைவன் எளிதில் வந்து ஆட் கொண்ட பெருமையையும் பற்றிப் பாடிய பாடல்கள் மிகக் கனிவானவை.

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந் தாழுறு புனலிற் கீழ் மேலாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்கு

உள்ளந்தா ளின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையும் மரமாந் தீவினையி னேற்கே''

என்ற திருப் பாட்டுத்தான் எத்தனை உருக்கமாயுள்ளது! இத்திருப் பாட்டில் பேரன்பர்களின் இயல்பு கூறக் கேட்கின்றோம். யாரேனும், "வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே" என இறைவன் பெயரைக் கூறவே அதனைக் கேட்ட மாத்திரத்திலே அன்பர்கள் நெஞ்சத்தில் சிவ வேட்கை எழுகின்றது. அவ்வேட்கையால் நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்து உருகுகின்றது. சிவனைப் புல்லிப் புணர்வது என்று கொல்லோ என்று பதைக்கின்றனர். பள்ளமடையிற் பாயும் நீர்போல் அன்பு பாய்ந்து ஓடுகின்றது எனக் கேட்கின்றோம். "தென்னா என்னா முன்னம் தீசேர் மெழுகொப்பாய்," என்பதும் அதுபற்றியே. இந்தக்கருத்தினையே,

"தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க் காஞ்சி
யூரொலிக்கும் பெருவண்ணா ரெனஒண்ணா நிலைமையினர்
நீரொலிக்க அளவொலிக்க நிலாமுகிழ்க்குஞ்சடைமுடியார்,
பேரொலிக்க உருகுமவர்க் கொலிப்பர்,பெருவியப்பி னோடும்,''

என்று சேக்கிழார், செய்யுள் நிலத்தில் முளைத்தெழுந்தது.

அங்ஙனம் பதைத்துருகுமவர்கள் இன்னும் ஆண்டவன் அருளைப்பெறாது காத்து நிற்கவும், வாதவூரரை வலிந்து ஈர்த்து ஆட்கொண்டு "அடித்து அடித்து அக்காரம் தீற்றியது," போல அருள் செய்தானும்.

அத்தகைய அருளுதவியை அறிந்து உருகுதற்கு அடிகளுக்கு உள்ள நெஞ்சின் இடம் போதாதாம். உள்ளங் கால் முதல் உச்சி அளவும் நெஞ்சேயாகி அந்த நெஞ்சு உருகுவதாகவும் இருக்கவேண்டுமாம், அகத்தே அவ்வாறு நிகழும்

அன்புக்கு ஏற்பப் புறத்தேயும் உடம்பு முழுவதும் கண்களே யாகி அடங்காத அன்புக் கண்ணீர் பாய வேண்டுமாம். அங்ஙனம் ஆகமாட்டாமல் இருக்கின்ற நெஞ்சு நெஞ்சல்லவாம்; கண் கண்ணல்லவாம். அவை முறையே கல்லும், மரமுமாம். என்னே! அவரது அன்பாசை! இப்பாட்டினை யாமும் கலந்து பாடுங்கால் எம்முள்ளத்தும் அன்பரும்பி இன்பத் தேன் ஊறுதோ!

இனி மாணிக்க வாசகர் தமக்கு இறைவன் அருள் செய்த இயல்பினைக் காண்போம்.

"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போது,'நான் வினைக் கேடன்' என்பாய் போல
'இனையன் நான்' என்று உன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு இரும்பின் பாவை
அனைய நான் பாடேன் நின்று ஆடேன், அந்தோ
அலறிடேன், உலறிடேன், ஆவி சோரேன்;
முனைவனே, முறையோ! நான் ஆனவாறு
முடிவறியேன் முதல் அந்தம் ஆயி னானே"

என்பது ஒரு தேனூறும் வாசகம். இதன் பொருள்:—

"யாதொன்று சூழினும் தான் முந்துறும்," தன்மையதான வினைவசப் பட்டுச், "செய்வதறியாச் சிறுநாயேனை நீ ஆட்கொண்டு எம்பிரான் ஆயினை! புகுந்து நின்று ஆண்டனை. எவ்வாறு புகுந்து ஆண்டனை எனின் கற்போலும் சிந்தை கசிந்துருகக் கருணையினால் நிற்பானைப் போல என் நெஞ்சினுள்ளே புகுந்து அருளியாண்டனை! குரு வடிவாகி வந்து புறத்தே என்கண் எதிரில் நிற்பவனைப் போலவே நின்று கொண்டிருந்தும் "கண்வழி நுழையுமோர், கள்வனினும் கள்வனாகி உள்ளே புகுந்து அகத்தும், புறத்தும் ஆயினை! நான் இத்தன்மையன் என்று உன்னை எனக்கு அறிவித்தனை! அதனால் உன்னை வினைக்கேடன் (வினையைக் கெடுப்பதைத் தொழிலாக உடையவன்; வேலை கெட்டவன்) என்று அறிந்தேன். உன்னைக் "காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே," உன்னை நீ அறிவிக்க அறிந்த யான் என்னையும்

அறிந்து ஏனைய எல்லாவற்றையும் அறிந்தேன். உனக்கு ஆட்பட்டேன். அதனால் என்னுடைய, மூவேழ் சுற்றமும் முரண் உறு நரகிடை ஆழாமே," ஆட்கொள்ளப் பெற்றனர். ஆதலால் எனக்கு மட்டுமே பிரான் ஆகாமல் எம்பிரான் ஆயினை. அத்தகைய கருணைச் செயலுக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன். யான் பெற்ற பேற்றினை நினைந்து உன்னைப் பற்றிப் பாடவேண்டும், பாடி நைந்து உருகி நெக்கு நெக்கு நின்றுட வேண்டும், அலறிட வேண்டும், உலறிட வேண்டும். ஆனால், இரும்பாலான பதுமை போன்ற நான் அவற்றுள் ஒன்றும் செய்திலேன். முனைவனே யான் இவ்வாறு ஆவி ஊறு முறை தானோ? இதன் பயன் யாதாய் விளையுமோ? முதலும் முடிவும் ஆகியவனே என்றவாறு, [உலறுதல்= மயிர் சிலிர்த்தல்; "பெயல் உழந்து உலறிய பீலி மஞ்ஞை" என நற்றிணையில் வந்து உள்ளது.

முனைவன் = வினையின் நீங்கி விளங்கிய அறிவினன். ஆவிசோரல் = தற்போதம் அழிதல்.]

வாதவூரடிகள் மலர் வாய்ப் பிறந்த மணிவாசகங்கள் சிவானந்தமாகிய தேனிலே ஊறினவை. ஓது வார்க்குத்தேன் ஊறுபவை. அடிகள் தாம் திளைத்த பேரின்பத்தின் பெற்றியை "ஆற்றேனாக அவயவஞ் சுவை தருகோல் தேன் கொண்டு செய்தனன்...... வாக்கிறந்த அமுதம் மயிர்க்கால் தோறும் தேக்கிடச் செய்தனன்........அற்புதமான அமுத தாரைகள் எற்புத்துளை தோறும் ஏற்றினன், உருகுவது உள்ளங் கொண்டு ஓருருச் செய்தாங்கு எனக்கு அள்ளூறு ஆக்கை அமைத்தனன்........ அருளொடு பராவமுதாக்கினன்" என்று திருவண்டப் பகுதியில் தெளிய உரைத்து அருளினர். இப் பகுதியை நாம் கலந்து பாடுங்கால் அவர் நுகர்ந்த பரமானந்தப் பழங்கடலின் சில திவலைகளேனும் நம் உள்ளத்திலும் உறுவோ!

பன்னூறாண்டுகளுக்கு முன்னிருந்த அடிகள் அருளிய அருள் அநுபவத்திற்குச் சான்றாகச் சென்ற நூற்றாண்டில்

இருந்த இராம கிருஷ்ண பரமஹம்சர் அருளிச் செய்ததைக் கேண்மின்—:

"ஒருவன் இறைவன் பாற் பேரன்பு பெற்றான் ஆனால், உடம்பின் மயிர்க் கால் எல்லாம் இன்பம் நுகர்வதற்கு ஏற்ற உறுப்பாக இறைவனோடு கலந்த இன்ப வெள்ளத்தை நுகர்கின்றான்."

அன்பே சிவம். சிவமே இன்பம். அன்பு இன்பு சிவம் என்ற சொற்களால் குறிக்கப்படும் பொருள் ஒன்றே என்பது தேனூறும் வாசகங்களால் அறிகின்றோம்.

"புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காம்
தொடக்கெலா மறுத்த நற் சோதி
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங் கெழுந் தருளுவது இனியே"

என்னும் இன்ப வாசகத்தை ஓதின் அன்பு விளைவதும் அதிசயமோ!

சிவன் சேவடியிற் பேரன்பு செனிக்கப் பெற்றோர் "பரமானந்தப் பழங்கடல்" சேர்வர். அதனால் "ஆவியாக்கை யான் என தென்றியாது மின்றியறுதல்" ஏற்படும். ஆவியை யானென்றும், உடலை எனது என்றும் நினைத்திருத்தல் அறவே ஒழிவது தான் சிவானந்தப் பேற்றுக்கு வழி. அன்பின் முழுப் பயன் "பெறவே வேண்டும் மெய்யன்பு பேரா ஒழியாப் பிரிவில்லா, மறவா நினையா அளவில்லாமாளா இன்பமாகடலே" என்ற பிரார்த்தனையினும் சிறந்த பிரார்த்தனை வேறு யாது? சிவமாகிய இன்பமாகடல் ஒன்றே ஏழு கடலினும் பெரியது என்பது விளங்கத்தானோ, அடிகள் அக்கடலினை 'பேரா' என்பது முதலாக ஏழு விசேடணங்களால் விசேடித்துக் கூறியருளினர்.

இன்பமா கடலில் திளைத்த பேரருளாளர்தம் நெஞ்சில் அதனையன்றி வேறெதுவும் புகுதற்கும் இடம் இராது. எல்லாம் அதுவேயாகவே இருக்கும். "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" என்று சைவசாத்திரம் சாற்றும். அத்தகைய ஞானிகளுக்குத் தலைவராகும் வாதவூரர் "யாருறவெனக்கிங்கு ஆர் அயல் உள்ளார் ஆனந்தம் ஆக்குமென்சோதீ" "ஊடுவதுன்னோடு உவப்பதும் உன்னை உணர்த்துவது உனக்கு எனக்கு உறுதி" என்றவாசகங்களில் ஊறுந்தேன் "நினைத்தனையுள்ளதோர் பூவினிற்றேன்" போல அறிவைமயக்காமல் தெளிவிக்கின்றதன்றோ?

தேனூறும் வாசகங்களை ஓதி உய்வோமாக. அவை தோன்றற்கு ஏதுவாக இருந்த அன்பும் அருளும் அடியேமுக்கும் அடிகளார் கமலச் சேவடியருள்வதாக.

"தேசத்தில் இனிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே ஆனந்த வடிவான மாதவனே
மாசகன்ற நிதிருவாய் மலர்ந்தமிழ் மாமறையின்
ஆசகன்ற அனுபவம்நான் அனுபவிக்க அருளுதியே"

(வடலூர் வள்ளலார்)

ஆரவார மறவொரு வார்த்தைசொல் அங்கணனை நினைதொறும் கண்ணினிர்
வாரவார அமுதருள் வாதவூர் வள்ளலார் மணிவாசகம் வாழியே

திரு ஞான சம்பந்தன் சேவடி வாழ்க!

# சேக்கிழாரும் சித்தாந்தமும்

(திரு. நல். முருகேச முதலியார், B.A.,)

சேக்கிழார் சைவத்திற்குச் செய்த பணிகள் பல திறத்தன. சைவ சமயவரலாற்றிலேயே அவருக்கு ஒப்பானூர் ஒருவரும் இலர் என்று சாற்றுவது மிகையாகாது. முதலாவதாக எண்ணவேண்டிய தொண்டு, அநபாய சோழனின் அவைக்களத்தில் சீவகனது வரலாற்றுக் கதைக்கு முதலிடம் பெற ஒட்டாது உண்மை நாயன்மார்கள் சரிதைகளை விளக்கியது. இல்லையேல் சிவபெருமான் அடியெடுத்துக் கொடுக்கப் பாடப்பெற்ற திருத்தொண்டத் தொகையின் பெருமையும், இராச ராச சோழனால் பாராட்டப்பட்ட திருத்தொண்டர் திருவந்தாதியின் பெருமையும், விளக்கமடைந்திருக்கமாட்டா. நாயன்மார்கள் சரிதைகளும் செயற்கரிய செய்த பெருந் தொண்டுகளும் மறைந்தோ, குழறுபட்டோ போயிருக்கும். எனவே நாடாண்ட மன்னனை அச்சரிதையில் ஈடுபடுத்தியதும், அரசியல் உதவிகொண்டு சமயத்தை வளர்த்ததும், தலையாய தொண்டு. இரண்டாவது, சேக்கிழார் நாயன்மார்கள் சரிதைகளைத் திருவருள் வழிகொண்டு தம் அளவிலா உழைப்பினாலும் அன்பினாலும் உருவாக்கியது ஒரு தெய்வீகச் செயலாகும். எந்நாட்டு வரலாற்றிலும் சுமார் 1000 ஆண்டுகளில் பற்பல காலங்களில் வாழ்ந்த அடியார்களின் வரலாற்றை உள்ளபடி, உணர்ந்தபடி, இறைவன் உணர்த்தியபடி எழுதிய வேறு ஆராய்ச்சியாளரைக் காண்கிலோம். ஆராய்ச்சிமட்டுமல்லாமல், அச்சரிதைகளை ஒரு பெரும் காப்பியமாக, உயர்ந்த சிவக் கவிதையாக்கியது ஒரு பெரிய தொண்டாகும். சைவத்தின் குலக்கவிஞராகிய சேக்கிழாருக்கு மேலாக ஒருவரையும் சொல்லல் இயலாது. மூன்றாவது சேக்கிழார் சைவ சித்தாந்த உண்மைகளைத் தெளிவுபடப் பெரிய புராணத்தில் உணர்த்தியது. இது முன்னிரண்டையும் விட மிகச் சிறந்த தொண்டு. இப்பொருளைப் பற்றி ஈண்டுச் சிறிது சிந்திப்பாம்.

சேக்கிழார் காலம் சைவ சித்தாந்த ஞானசூரியனான மெய்கண்டாரின் காலத்துக்குச் சுமார் 70 ஆண்டுகள் முந்தியது. ஆனால் இராமாநுசர், மத்துவர், பாசசர், பசவேசுவரர் முதலி

யவர்களுக்குச் சிறிது பின்னே சிறிது சமமாகவோ இருக்கும். அடியார்க்கு நல்லார் போன்ற இலக்கிய ஆசிரியர்கள் காலமும் ஏறக்குறைய அதுவே. இந்தச் சூழ்நிலையில் தமிழ் மறையாகிய தேவாரத் திருமுறைகள் இருந்த போதிலும், ஞானமிர்தம் முதலிய சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் இருந்த போதிலும், சித்தாந்தத்தின் முப்பொருள் உண்மைகளைத் தத்துவ நூலாக மட்டும் இயற்றாமல் அனுபவம் சான்ற உண்மை அடியார்களின் சரிதைகள் வாயிலாகவும் அவர்கள் திருவாய் மலர்ந்த தெய்விகப் பாடல்கள் மூலமாகவும் விளக்குவது அவசியமாயிற்று. முதலில் சமயத்தை வலுப்படுத்தித்தான் சமயக் கோட்பாடுகளை நிலைநாட்ட வேண்டும். சேக்கிழார் பெருமான் தேவாரப் பாடல்களின் உண்மைப் பொருள்களைப் பெரிய புராணத்தில் ஆங்காங்கே எடுத்து ஓதி இறைவனின் பஞ்ச கிருத்திய அருட்டிறத்தினை அடியார்கள் சரிதைகளில் விளக்கிக் காட்டவில்லையேல், வேதாகமங்களின் ஞானசாரமான சைவ சித்தாந்தம் 'இராசாங்கத்தில்' அமர்ந்திருக்க முடியாது. எனவே சேக்கிழார், மெய்கண்ட தேவ நாயனர் பின்னர் அருளிய சிவஞான போதம் என்ற பெருஞ் சாத்திரத்திற்கு அடிகோலினர் என்பது உண்மை.

இந்த உண்மையை விளக்கப் பெரிய புராணத்தில் எடுத்த இடமெல்லாம் சான்று காட்டுவது எளிது. அவைகளையெல்லாம் விடத் தலைசிறந்தது சேக்கிழார் திருப்பாசுரத்துக்குத் தந்துள்ள விளக்கமேயாகும். இப்பாடல்களைச் சித்தாந்த சாத்திரம் பதினான்கிற்கு ஒப்பாகவும் ஒரு முறையில் உயர்வாகவும் சொல்லலாம். திருஞான சம்பந்தரது திருப்பாசுரத்தைச் சிவாகமங்களின் ஞானபாத முடிவாய்ச் சிவஞான போதத்துள் வடித்துக் காட்டப்படும் பன்னிரண்டு சூத்திரங்களின் மூலபாடமாக உணரலாம். முதல் மூன்று பாட்டுக்கள் பொது வகையிலும் பின்பாட்டுக்கள் சிறப்பு வகையிலும் அமைந்துள்ளன. இவைகளுக்குச் சேக்கிழார் பெருமான் இருபத்திரண்டு பாட்டுக்களில் மெய்ப்பொருள் முடிவுகாட்டும் வகையில் பேருரை அருளியுள்ளார். முதல்பாட்டாகிய

'வாழ்க வந்தணர்' என்ற பாட்டின் விளக்கத்தில் சங்காரக் கடவுளாகிய சங்கரனே முதல்வன் என விளக்கி எல்லாச் சந்த வேள்விகளும் அர்ச்சனையும் வழிபாடும் அவர்க்கே உரியன எனக் கூறியுள்ளார். இரண்டாவது அருமைப் பாட்டாகிய 'அரிய காட்சியராய்' என்ற பாட்டின் விளக்கம் சித்தாந்தத்தின் அரிய கொள்கையான இறைவனது சொரூப தடத்த இலக்கணங்களைக் கவின் பெற விளக்குகிறது. அப் பாட்டு —

" அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரியலா நிலையாற் றெரியா ரென,
உரிய அன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினர்."

என்பது. முன்பாட்டில் கூறிய பதி, பாச, பசுஞானங் களால் தெரியப்படாத நிலைமையுடைமை காரணமாக அரிய காட்சியர். அவ்வாறு பாச பசு ஞானங்களால் தெரியமாட் டாதவர். காண்பதற்கு உரிய அன்பின் திறத்தாலே காணும் பக்குவமுடைய அடியார்கள் காண உள்ளன்பான நல்லடையாளங்களால் இறைவன் அருளுகின்றான் என்று அழகாகச் சேக்கிழார் விளக்கியுள்ளார். இதை, "அறி பொருள் அசித்தாம், அறியாத தின்றாம்" என்று சாத்திரம் கூறுகிறது. இறைவன் காட்சிப்படும் நிலை "ஊனக்கண்பாச முணராப் பதியை, ஞானக் கண்ணிற் சிந்தைநாடி" (9-சூ) என்ற போதமும், அதைத் தொடர்ந்த சித்தியார் பிரகாசம் முதலியவைகளின் வாக்குகளும், காழிப் பிள்ளையாரும் குன் றைக் குலக் கவிஞரும் சொன்னதை வலியுறுத்துகின்றன. முந்திய நூல்களாகிய உந்தியார் "அகளமா யாரு மறிவரிதப் பொருள் "அகளமாய் நின்றவம் பலத் தெங்கூத்தன்" என் றும் சொல்லிப் போயின. சேக்கிழார் பதியுண்மை, பதி யிலக்கணம் இவைகளை நன்கு கூறியுள்ளார்.

போதம் எட்டாம் பாட்டின் சூத்திரப் பொருளைப் பின் வரும் சேக்கிழார் பாட்டில் எளிமையாகக் காணலாம்.

" தம்மையே சிந்தியா வெனுந் தன்மைதான்
மெய்ம்மையாகி விளங்கொளி தாமென

> இம்மையே நினைவார்தம் இருவினைப்
> பொய்ம்மை வல்லிருள் போக்குவா ரென்றதாம்.''

இயான உறைப்பினாலே இருவினை ஒப்பும் மலபரிபாகமும் வரச் செய்து மலத்துன்பத்தினின்றும் நீங்கலாம் என்ற செய்தியை ''அவையேதானே யாயிருவினையிற் போக்குவரவு புரிய ஆணையில் நீக்கமின்றி நிற்குமன்றே'' என்ற போதம் (சூத்திரம் 2) நினைவு படுத்துகிறது. சேக்கிழாரின் இத் திருப்பாட்டு பொய்ம்மையைப் போக்கி மெய்ம்மையை அடைவிக்கும் சாதனத்தையும், பாச நீக்கத்தின் பயனையும் குறிக்கின்றது.

## "ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணம்"

''எதுக்களாலும் எடுத்தமொழியாலும்'' என்ற திருப் பாசுரப் பாட்டுக்களுக்குச் சேக்கிழார் தந்துள்ள விளக்கங் களைப் போதம் எட்டு ஒன்பது சூத்திரங்களும், சித்தியார் பாட்டுக்கள் பலவும் உள்ளடக்கியுள்ளன.

> ''போதித்த நோக்குற் றெழியாமற்பொருந்தி வாழ்ந்து
> பேதித்த பந்தப் பிறப்பின் னெறிபேர்மி னென்றும்''

என்ற சேக்கிழார் பாட்டு. ''தம்முதல் குருவுமாய்த் தவத் தினில் உணர்த்த'' என்ற போதத்தின் கருத்தை நினைவு படுத்துகின்றது. சித்தாந்தத்திற்கு உயிர் நாடியாக உய்வை உறுதிப்படுத்தும் இந்தக் கொள்கையைத் திருத் தொண்டர்களுக்குஇறைவன் எப்படிநிராதாரமாகவும் சாதார மாகவும் பக்குவத்திற்குத் தக்கபடி குருவடிவாய்த் தோன்றி அருளுவர் என்பதனை உணர்வதே முன்னை வல்வினையை முடிப்பதற்கு வழியல்லாது வேறு ஆராய்ச்சி தேவையில்லை யென்பதும், ஆதலினாலே தாம் எழுதப்புகுந்த திருத் தொண்டர் புராணம் இந்தச் சாதனத்துக்கு உதவி எனபதும் உணர்த்தச் சேக்கிழார் பின்வருமாறு அருளியுள்ளார்.

> ''.........ஆதியார் தாளடைந்
> தின்ன கேட்கவே யேற்ற கோட்பாலவும்
> முன்னைவல் வினையும் முடிவெய் துமத்
> தன்மையார்க்கு என்றனர் சண்பை காவலர்.''

சித்தாந்தத்திற்குச் சப்தப்பிரமாணம் உடன்பாடு என்பதைக் குறிக்கப் பாசுரம் ஏழாம்பாட்டில் சண்டீசர் முக்கண்மூர்த்தி யடி சேர்ந்த வண்ணம் "அறிவார் சொலக் கேட்டும்" என் பதைச் சேக்கிழார் மறுபடியும் ஒரு முறை "தக்கோர் பெரிதும் சொலக்கேட்டனம்" என்றார். சித்தாந்தத்தின் முழு உண்மையை இறைவன் உணர்த்தினாலன்றி உணர முடி யாது என்பதைச் "சண்பையர் வேந்தர் மெய்ப்பாசுரத் தைக் குறியேறியவெல்லை அறிந்து கும்பிட்டேனல் லேன் சிறியேன் அறிவுக்கு அவர்தம் திருப்பாதம் தந்தநெறியே சிறிதுயானறி நீர்மை கும்பிட்டேன் அன்பால்" என்னும் பாட்டால் தெரிவிக்கின்றார்.

சேக்கிழார் பெருமான் சைவசித்தாந்த சம்பிரதாயத் தைத் தெளிவுற விளக்குதலை மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தம் பிள்ளைத் தமிழில் பாராட்டியுள்ளார்கள்.

"பேர் கொண்டசைவபரிபாடை யரிவறிய சம்
பிரதாயம் முதலிய யாவும்
பிறங்கத் தெரித் தெம்மையாண்ட குன்றத்தூர்ப்
பிரானைப் புரக்க வென் றே."

என்பது காப்புப் பருவப் பாட்டிலொன்று. பிள்ளையவர் கள் சேக்கிழாரின் பக்திச் சுவை நனி சொட்டும் கவிதையை மட்டும் வியந்ததில்லை. அவர் சித்தாந்த நெறியை விளக்கிய சீர்மையையும் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

இன்னொரு பாட்டில் சேக்கிழார் மூவர் அருள் மறைப் பொருளைத் தெரிவித்துள்ளார் என மகா வித்வான் கூறியுள் ளார். அது

"அருண் மூவரருண் மறைப் பொருடெரிய முன்னொருவ
ரருண் மறைப் பொருள் விளக்கு
நம்பரு வித்தியா ரணிய முனிவரன் உளம்
நயப்ப யாப் புற விரித்த
நாவலர் பிரான் .........என்பது"

வேதத்துக்குப் பாடியம் கண்ட வித்தியாரண்யரின் உளம் நயப்பச் சேக்கிழார் சைவ மூவர் அருள் மறைக்குப் பொருள் தெரித்தார் என்பது வெகு அரிய செய்தி. மிக உயர்ந்த பாராட்டு. வித்யாரண்யர் மனம் உவந்த குறிப்பின் விளக்

கத்தை நம்மவரில் ஆராய்ச்சியாளர்கள் ஆராய்வது மிகவும் வேண்டற் பாலது.

தமிழ்மறையில் அடங்கிய பல இரகசியங்களைச் சேக்கிழார் விளக்கியுள்ளார் என்று மகாவித்வான் கூறியுள்ளார். அதுபின்வருமாறு.

" தவாப் பொருளணிச் சிறப்பும்
தமிழ்மறை யடங்கு பல மந்தணமும் வெள்ளிடைத்
தவிரும் வெற்பென விளங்க " என்பது.

சைவசித்தாந்தத்தில் காணப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நாற்பாதங்களையும் சேக்கிழார் பெருமான் உலகறியச் சாற்றினர் என்பதை மகாவித்துவான் செங்கீரைப் பருவம் 9 ஆம் பாட்டில் அழகாகக் கூறியுள்ளார்.

சைவ சமயத்தின் தனிச்சிறப்பான மலத்தை மாற்றும் தீக்கையின் பயனைத் தாலப்பருவம் 6 ஆம் பாட்டில் மகாவித்வான் குறிப்பிட்டுள்ளார். 7 ஆம் பாட்டில் அடியார்களின் அன்பு அத்தனையும் சேக்கிழார் கண் காணும்படிச் செய்தார் என்பதையும், அவர்களுடைய தமிழ்மான்மியம் சைவப் பயிரைத் தழைக்கச் செய்தது என்பதையும் மகாவித்துவான் பாராட்டியுள்ளார்.

முக்கியமாகச் சேக்கிழார் திருப்பாசுரத்துக்கு உரை அருளியதன் பெருமையைச் சப்பாணிப்பருவம் 9 ஆம் பாட்டில் மகாவித்வான் வெகு அற்புதமாகப் பாராட்டியுள்ளார். சேக்கிழார் நூலாசிரியராகவும் உரையாசிரியராகவும் போதகா சிரியராகவும் ஞானசிரியராகவும் திகழ்கின்றார் என்கிறார் மகாவித்வான். சித்தாந்த ஞானம் தலைக் கட்டச் செய்த ஞானகுரு சேக்கிழார் என்பதில் ஐயமுண்டா? அவர் சித்தாந்தப் புகழ் என்றும் நின்று நிலவுக!

" நாக்கு சிர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான் அடி சென்னி இருத்துவாம் "

— சிவஞானசுவாமிகள்.

# சேக்கிழாரும் தேவாரமும்

—: புலவர்மணி, வித்துவான். தி. கி. சுந்தரமூர்த்தி. :—

தெய்வத் திருவருள் கைவந்து, தமிழ் மணமும் சிவ மணமும் கமழப் பத்திச்சுவை சொட்டப் பன்னிரண்டாம் திருமுறையை அருளியவர் சேக்கிழார் பெருமானுவார். இவாருளிய திருத்தொண்டர் புராணம் செப்பரிய செந் தமிழ்ப் பாக்களால் திகழ்கின்றது. பயன்கருதாத அடியார் களின் வரலாறு கூறுவதாய், இறைவன் அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற பெருமையுடையதாய், தமிழ்ப்புராண நூல்களில் முதல் நூலாய் மிளிர்கின்றது. பைந்தமிழ் நூல் கள் பலவற்றுள்ளும் சிவஞான நெறி சேர்க்கும் தலை நூலாய்த் திகழ்கின்றது. இந் நூற்பாக்க ளெல்லாம் தொடக்க முதல் இறுதிவரை சிவனருள் நிறைவே பெற்று விளங்குவதால் ஏனைப் புலவரியற்றிய இயற்றமிழ் வளத் திற்கு மேற்பட்டதாக விளங்குகின்றன.

சேக்கிழார் தமக்கு முன்பிருந்த பெரியோர் திருவாக் குக்களைப் பெருவாக்காகப் பேணித் தம் நூலுள் அமைத் துள்ளார். திருக்குறள், திருவாசகம் முதலிய பனுவல்க ளின் அரிய கருத்துக்களும் சொற்றொடர்களும் பல இடங் களில் ஒளிர்கின்றன. சிறப்பாகத் திருமுறையாசிரியர் களின் செம்மொழியும் பொருளுமே கொண்டு, தம் அருள் நூலை அருள் மொழித் தேவராம் சேக்கிழார் இயற்றி யுள்ளார் என்பது அறிவுடையார் அனைவரும் அறிந்த ஒன்றாகும்.

தேவாரம் என்ற பெருங்கடலினுள்ளே குதித்துத் திளைத்து அதனுட் பெறும் பயன் யாவும் தேர்ந்து எடுத்துக் கூறியுள்ளார். பற்பல தேவாரங்களின் முதற்குறிப்பை யும் உட்குறிப்புக்களையும் ஆங்காங்கே எடுத்துக் காட்டி யுள்ளார். பதிகம் தோன்றிய வரலாற்றையும் விளக்கியுள் ளார், அஃதே போன்று தேவார ஆசிரியர்கள் பாடியருளிய பண்களையும் தக்க இடங்களில் அமைத்துப் பண்ணென் றப் பாடியுள்ளார்.

இக்கட்டுரையில் சேக்கிழார் எடுத்தாண்ட பலபண் களை விளக்கமுடன் காணலாம். அவை பொருத்தமாக

உள்ளனவா என்பதனைத் தேவார இசைவல்லுநர்கள் இசைத்துப் பார்த்துத் தெளிய வேண்டுகிறேன். என் சிற்றறிவுக் கெட்டிய வரையில் சில பண்களே இதில் குறிக்கப் பெற்றுள்ளன. பிறவற்றையும் ஆய்ந்து காணின் சைவ உலகம் நற்பயன் பெறும் என்பது என் கருத்தாகும்.

தேவாரத் திருமுறைகளில் காணப் பெறும் பண்கள் 21 ஆகும். (அவை பகற்பண் 10. இராப்பண் 8. பொதுப் பண் 3) முறையே அவற்றைப் பின்வரும் பட்டியலில் காணலாம்.

### பண்கள்

| நாழிகை. | பகற்பண் 10 | தற்காலம் பாடும் இராகம் |
|---|---|---|
| 0–3 | புறநீர்மை | ஸ்ரீ கண்டி, பௌளி |
| 3–6 | பியந்தைக்கந்தாரம் | பிலகிரி, இச்சிச்சி, |
| 6–9 | கௌசிகம் | பயிரவி |
| 9–12 | இந்தளம், குறுந்தொகை | நௌித பஞ்சமி |
| 12–15 | தக்கேசி | காம்போதி |
| 15–18 | நட்டராகம், சாதாரி | பந்துவராளி |
| 18–21 | நட்டபாடை | நாட்டைக் குறிஞ்சி |
| 21–24 | பழம் பஞ்சுரம் | சங்கரா பரணம் |
| 24–27 | காந்தாரபஞ்சமம் | கேதார கௌளை |
| 27–30 | பஞ்சமம் | ஆகிரி, |
| | இராப்பண் 8. | |
| 30-33¾ | தக்க இராகம் | கன்ன காம்போதி |
| 38½ | பழந்தக்க ராகம் | சுத்த சாவேரி |
| 47¼ | சீகாமரம் | நாதநாமக்கிரியை |
| 45 | கொல்லி, கொல்லிக் கௌவாணம், நேரிசை, திருவிருத்தம் | சிந்து கன்னடா |
| 48¾ | வியாழக் குறிஞ்சி | சௌராஷ்டிரம் |
| 52½ | மேகராகக்குறிஞ்சி | நீலாம்பரி (சாவேரி) |
| 56¼ | குறிஞ்சி | மலகரி |
| 60 | அந்தாளிக்குறிஞ்சி | சைலதேசாட்சி--சாமா |
| | பொதுப்பண் 3 | |
| | செவ்வழி | எதுகுல காம் போதி |
| | செந்துருத்தி | மத்தியமாவதி |
| | திருத்தாண்டகம் | பியாகடை |

தேவாரத்திருமுறை ஆசிரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூவரும் அருளிய பண்களைப் பலகாலும் பாடிப்பழகிய சேக்கிழார், தாம் பாடிய திருத்தொண்டர். புராணத்திலும் ஏற்ற இடங்களில் பல பண் முறைகளைக் கையாண்டுள்ளார்.

**கொல்லி :**

திருநாவுக்கரசர் சூலை நோய் நீங்கப் பெற்றதும், திருவதிகை வீரட்டானத்திலருளிய "கூற்றுயினவாறு விலக்ககிலீர்" என்னும் தேவாரப் பாடலின் பண்கொல்லி ஆகும்.

சேக்கிழார் இப்பண் முறையிலேயே, நாவுக்கரசர் தமிழ் மாலைசாத்தும் உணர்வு பெற்றவுடன் பாடியதாகக் கூறுமிடத்துப் பாடுகிறார்.

"நீற்றல் நிறைவாகிய மேனியுடன் நிறை அன்புறு
சிந்தையில் நேசமிக
மாற்றார்புரம் மாற்றிய வேதியரை மருளும்பிணி
மாயை அறுத்திடுவான்
கூற்றுயினவாறு விலக்ககிலீர் எனநீடிய
கோதில் திருப்பதிகம்
போற்றுலுல கேழின் வருந்துயரும் போமாறெதிர்
நின்று புகன்றனராய்"

காந்தாரம்! அப்பர் திருவையாற்றில் கண்ட சிவன் திருக்கோலத்தை "மாதர் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடி" எனவருளிய திருப்பதிகம் போன்றே சேக்கிழாரும்,

"மாதர் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும்
என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால் குலவு திருப்பதி
கங்கள்
வேத முதல்வர்ஐ யாற்றில் விரவுஞ் சராசரம் எல்லாம்
காதல் துணையோடுங் கூடக் கண்டேன் எனப்
பாடி நின்றார்"

காந்தார பஞ்சமம்: நாவுக்கரசரைச் சமணர்கள் கல்லினோடு சேர்த்துக் கட்டிக் கடலில் தள்ளிய காலத்து அரு

ளிய "சொற்றுணை வேதியன்" எனும் காந்தாரப் பஞ்ச மப் பண்ணை

"சொற்றுணை வேதியன் என்னுந் தூய்மொழி
நற்றமிழ் மாலையாம் நமச்சி வாயஎன்(று)
அற்றமுன் காக்கும்அஞ் செழுத்தை அன்பொடு
பற்றிய உணர்விஞல் பதிகம் பாடினுர்" —திருநா 126

எனப் போற்றி இம்முறையிலேயே பல பாடல்கள் பாடி னர்.

திருநாவுக்கரசர் அருளிய திருவிருத்தங்கள் மிகச்சிறப் புடையன. அவற்றின் சொல்லேயும் பொருளேயும் இசை யொன்றச் சேக்கிழார் பல இடங்களில் அமைத்துள்ளார். சான்ருக ஒன்றை மட்டும் காணலாம். நாவரசர் விருத்தங் களுள் கற்பார் மனத்தை உருக்கும் இயல்பிற்ருய "ஈன்ரு ளுமாய் எனக்கெந்தையுமாய்" என்பதனை,

"ஈன்ருளுமாய் எனக்கெந்தையுமாகி எனவெடுத்துத்
தோன்ருத் துணையாய் இருந்தனன் தன்னடியோங் கட்கென்று
வான்தாழ் புனற்கங்கை வாழ்சடையானை மற்றெவ் வுயிர்க்கும்
சான்ரும் ஒருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே"

எனப் பாடி யுருகியுள்ளார் சேக்கிழார்.

மேகராகக் குறிஞ்சி: சப்பந்தர் பெருமானின் மேகரா கக் குறிஞ்சியைப் பின்பற்றிச் சேக்கிழாரின் பல பாடல் கள் அமைந்துள்ளன. "மாதர் மடப்பிடியும்" என்ற யாழ் மூரிப்பண் எந்த இசையில் பாடப்பெற்றது என்பதைக் குறிப்பிக்கும் சேக்கிழார் பாடல், இப்பண் வந்த வரலாற் றைக் கூறுமிடத்து மேகராகக் குறிஞ்சி முறையில் அமைத் துள்ளதால் "மாதர் மடப்பிடி" என்ற பண்ணும் மேக ராகக் குறிஞ்சியே என்பதைத் தெளியலாம், யாழ்மூரி என்பது பண்ணின் வகையில் ஒன்றன்று என்பது தெளிவு. அப்பண்ணைப் பல ஓதுவாமூர்த்திகளும் அடாணு இராகத் தில் பாடி வந்தனர். சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்பே திரு குருசாமி தேசிகர் என்பவர் அடாணு சரியன்று என்றும், நிலாம்பரியிலேயே பாடவேண்டும் என்றும் கூறியுள்ளார். அவர் கருத்தையும் இதுவிலே நாட்டுகின்றது. (தொடரும்)

# சித்தாந்தச் சொற்பொழிவுகள்

சைவ சித்தாந்த சாத்திர வகுப்புக் குழுவின் சார்பில், ஜூலை மாதம் 29, 30, 31, தேதிகளில், சென்னை எழும்பூர் மினர்வா கல்லூரி விசுவபாரதி கூடத்தில் மூன்று நாட்கள் சிறப்புற நிகழ்ந்தன .29-ஆம் தேதி காலையில் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை B. A., L. T. அவர்கள் கொடிக்கவி என்பது பற்றி அரியதொரு சொற்பொழிவு ஆற்றினார்கள். 30, 31, தேதி முறையே டாக்டர் திரு. பா. நடராசன் M. A., Ph. D., M. L. A. அவர்களும், டாக்டர் திரு. வ. ஆ. தேவசேனாபதி, M. A., Ph. D., அவர்களும் சைவசித்தாந்தத்தின் சிறப்பியல்புகள் குறித்து ஆங்கிலத்தில் விரிவுரை செய்தனர். மூன்று நாட்களும் அறநிலையத் துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B. A., B. L. போன்ற தக்கவர்கள் பலரும் வந்திருந்து கேட்டுச் சிறப்பித்து மகிழ்ந்தனர். குழுவின் செயலாளர் திரு அய்யா சுப்பிரமணிய முதலியார் அவர்கள் அனைவருக்கும் வரவேற்புரை நன்றியுரைகள் வழங்கினார்.

## முக்கிய அறிக்கை

---

'சித்தாந்தம்' கட்டுரை சம்பந்தமான கடிதங்களைப் பத்திராசிரியர் புலவர் N. R. முருகவேள் M. A. M. O. L., 73 கொத்தவால்சாவடித்தெரு, சைதாப்பேட்டை, சென்னை–15 என்ற முகவரிக்கும், மற்ற கடிதங்களைச் செயலாளர், 12, கிழக்கு மாடவீதி மயிலாப்பூர் சென்னை-4 என்ற முகவரிக்கும் எழுதும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 35—No- 8

# சமாஜ நிகழ்ச்சிகள்

மாணிக்க வாசக சுவாமிகள் திருநட்சத்திர விழா: 6—7—62ல் இவ்விழா திருமயிலை வணிக வைசிய மண்டபத்தில் நடைபெற்றது. குகஸ்ரீ ரசபதி அவர்கள் தலைமையில் திரு. C. N. சிங்காரவேலு M. A. அவர்கள் "மணிவாசகரும் திருவாசகமும்" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநட்சத்திர விழா: 8—8—62ல் இவ்விழா திருமயிலை வணிக வைசிய மண்டபத்தில் நடைபெற்றது. அவ்வமயம் ஆட்சிமொழிக் காவலர் திரு. கி. இராமலிங்கனார் M. A. அவர்கள் "ஆரூரர் பெற்ற அருள் நலம்" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

சமாஜச் செயற்குழுக் கூட்டம்; 26—8—62 ஞாயிறு காலை 9—30 மணிக்குச் சமாஜ அலுவலகத்தில் கூடும். அவ்வமயம் சமாஜச் செயலாளர் பதவி விலகல், கணக்குப் பார்த்தல், சமாஜக் கட்டிட டிரஸ்ட் சம்பந்தமாக மேற்கொண்டு செய்யவேண்டியவை, சைவப்புலவர் தேர்வுக் கட்டணம் முதலியவை பற்றி ஆலோசிக்கப்படும். செயற்குழு உறுப்பினர் இதையே அழைப்பாக ஏற்றுக்கொண்டு வருமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

G. கலியாணம்,
சமாஜச் செயலாளன்.

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.